A BIWEEKLY YOUTH NEWSPAPER CIRCULATING THE GTA

TOTAMIL.COM



# TO தமிழ்

HALLOWEEN IS... SEE PAGE 15




MONDAY OCTOBER 24 2005
VOLUME 1, NUMBER 4

கொலையாளிகள் இன்னும் சுதந்திரமாக...

-Page 13

CHILD SEXUAL ABUSE

-Page 10

விடப்பட்ட சில பக்கங்கள்

-Page 26

## கனடாவில் பாலியல் கொடுமைக்குள் தமிழ் சிறுமிகள்!

STAND BY OUR ROOTS - CONTINUE OUR LEGACY

**Director**
Deba Christy

**Chief-Editors**
Akil
Shamini

**Editorial Team**
Inez
Ajith
Anjali
Salini
Mathura
Selvan Balasingam

**Layout & Design**
Jeevakumar
Akil

**Ads Design**
Selvan Balasingam
Ragu

**Marketing & Advertising Director**
Amal

**Distribution coordinator**
Richman

**Web Design**
Sri
Maji-Rajieive

**Website:** www.totamil.com

**Email:** info@totamil.com
ads@totamil.com
edit@totamil.com

**Office:**
1468 Victoria Park Ave., Suite 113
Toronto, ON
M6A-2M2

**Advertising Inquiries**
(416) 751-5990

**Fax:**
416 751 7084



We at TO Tamil are very interested in hearing from fellow journalists and in receiving articles, reviews, and opinion pieces from readers. So please, if you have something you want to say and would like to see published - don't be shy – send it to edit@totamil.com.

## கடிதம்

வணக்கம்!

ஊடகத்துறையின் வரைவிலக் கணம் என்பது எது? இவை களை அறியாதவர்களா நாங்கள், பிரச்சனைகளை மட்டுமே பிரச்சினையாக எழு துகின்றோம்.

இது எங்கள் மீது சுமத்தப் படும் குற்றச்சாட்டு. சுமர்த்தி யர்களுக்கு நன்றி. வரவேற்ப வர்களுக்கும் நன்றி.

எமது வழி வரைவிலக்கணத் துக்கு அப்பாற்பட்டு இருக் கலாம், வரம்புகளையும் மீறி யிருக்கலாம். எது எப்ப டியோ, எமது நோக்கம் சென் றடைதல். அதை இந்தக் குறுகிய காலத்தில் அடைந்தி ருக்கின்றோம் என்பதை எம்மீது சுமத்தப்படும் வர வேற்கப்படும் அனைத்துக் கருத்துகளிலிருந்தும் உணர முடிகிறது.

எமது பார்வையில் ஊடகம் என்பது அது சார்ந்திருக்கும் சமூகத்தின் பிரதிபலிப்பாக, குரலாக, அடையாளமாக இருத்தல் என்பதே. அதுவே தான் ஊடகத்துறையின் உண் மையான வழியும் என நம்புகின்றோம்.

எவ்வளவுக்கு எமது தேச விடு தலை அவசியமோ, அவ்வள வுக்கு எமது அடையாளங் களும் அவசியம். அவை இப்புலம் பெயர்ந்த மண்ணில் அழிந்து போகாமல் காப்பது யாருடைய கடமை?

விடுதலைக்கு எப்படி வீரன் அவசியமோ, அப்படியே கலா ச்சார மறுமலர்ச்சிக்கு ஊட கம் அவசியம். விடுதலைப் போரை எமது தேசத்தில் வீரர்கள் சரிவர ஆற்றிக் கொண்டிருக்கிறார்கள்.

விழுந்தும், அழிந்தும் கொண் டிருக்கும் கலாச்சார சீர ழிவை புலம்பெயர்ந்த இந்த மண்ணில் சரிவர நிலைத்து நிற்க நாம் போராட வேண்டும்.

ஒரு சமூகத்தின் சாபக்கேடு அச்சமூகம் சார்ந்த அமைப் புக்கள் சுயநலமாய் மாறும் பொழுது நிகழ்கின்றது. பிரச்சி னைகளை மூடி மறைக்கும் பொழுதும் நிகழ்கின்றது.

நிகழ்ந்து கொண்டிருக்கும் இவைகளை மறுத்து விட்டு, எதை நாம் சாதிக்கப் போகி ன்றோம்.

முடிந்தளவு சமூகச் சீர்கேடு களை படம்பிடித்துக் காட்டுவோம். அடுத்த தலை முறையின் கையில் சிறந்த சமூகத்தை கையளிப்போம்.

அப்பணியில் உங்களோடு நாமும்.............

***"Coming together is a beginning, staying together is a progress and working together is success"***

அகில்

## eDITORIAL

Generally, there's a love/hate relationship regarding the media. Newspapers, TV and radio are often criticized for being unfair or inaccurate. We at TO Tamil work for fairness and accuracy as we thrive for good reporting and credibility.

TO Tamil readers are liberal, broadminded thinkers who read TO Tamil not because it supports the views of our society but because we challenge those views and reflect on our society's problems. TO Tamil's issues are objective, genuine and more importantly, factual. We attempt to point out the flaws of our community because our vision is to solve those problems collectively. Although we focus on youth, we want to connect generations as families read these stories together. Some of our critics feel that our coverage on youth violence is not appropriate but I defend TO Tamil's coverage of such issues as inclusive and open minded. Why can't we disagree, and still preserve unity?

The problem of youth violence is far from solved. If the pen is mightier than the sword, how shall the power of the press be described? What if all the young people whose lives have been wasted in gangs use their strengths productively to prevent youth violence? What if they make a commitment not to contribute to violence in any way and get involved in school? Is this possible? Absolutely. Are our youth intelligent? Extremely. Engaged, skeptical, ambitious and realistic? Of course. We must work together to provide a better solution for our Tamil youth by teaching them ways to resolve arguments without violence.

shamini

# கனடாவில் பாலியல் கொடுமைக்குள் தமிழ் சிறுமிகள்!



2004ஆம் ஆண்டு கோடை காலத்தில் நடந்த செக் கம் அமைப்பின் கலை விழாவில் அவன், அவள், அவர்கள் என்ற நாட கத்தை பார்த்துக்கொண் டிருந்தேன். ஒரு குடும்ப த்தை எடுத்து மகனை அவனாகவும், மகளை அவளாகவும், முழுமை யான குடும்பத்தை அவர் களாகவும் காட்டிய அந்த நாடகத்தில் சொல்லப் பட்ட பிரச்சினைகளில் அவள் சார்ந்த பிரச் சினை. என்னால் நம்ப முடியாத விடயமாக இருந்தது. 13 வயது நிரம் பிய அவள் தனிமையில் இருக்கும் பொழுது தனக் குள் கதைத்துக் கொள்கி றாள். சில நேரங்களில் சத்தமாக கதைக்கின் றாள். சில நேரங்களில் பயித்தியம் போன்று அவள் அங்கும் இங்கும் ஓடி அலைகின்றாள். அவள் குரலில் சொல்ல முடியாத சோகத்தின் சாயல் எதிரொலிக்கின் றது. அம்மா, அம்மா என அவள் இப்பொழுது கதறு கின்றாள். என்னை விட்டு போயிடாதீங்கள், என்னை தனியாக விட்டு போயிடாதீங்கள் என அவள் தவிக்கும் அந்த தவிப்பினை பார்ப்பவர் கள் கண்களில் நிச்சயம் கண்ணீர் வடியும். திடீரென ஒரு உருவம் உள் நுழை கின்றது. அவ் உருவத்தை பார்த்தவுடன் அவள் திக்பிரமை பிடித்தவள் போல் அமைதியாகின் றாள். அவ் உருவம் அவளை நெருங்கி மறைகின்றது. இப்பொழுது அவள் மறைக்கப்பட்டு விட்டாள். சோகமான இசையோடு பின்குரல் சொல்கிறது.

வேசி மகனான இவனால் அவள் வெறித்தனமாக கற்பழிக்கப்படுகிறாள், இது தினமும் தொடர் கிறது. பாதுகாப்பிற்கு விடப் பட்டவனாலேயே பாலி யல் கொடுமை அவளுக்கு இந்த கொடூர த்தை அவள் சொல்ல முடியாது. அதற்குள் எம் சமூகம் நம்பவும் தயா ரில்லை. இது தொடர் கிறது.... அதற்கு மேல் என்னால் அங்கு இருக்க முடியாமல் வெளியே வந்து விட்டேன்.அன்றிரவு நாடகத்தை இயக்கிய நண்பனிடம் ஏன் இப்படி தேவையில் லாத சமூகத்தில் இல்லாத பிரச்சினைகளை நாடக மாக்கினாய் என்று கேட் டேன். அதற்கு அவன், என்னை சிறிது நேரம் பொறுக்கும் படி கூறி னான். சிறிது நேரத்தின் பின் எனக்கு அவளை அவன் அறிமுகம் செய்து வைத்தான். அந்த அவள் தான் என் நண்பன் இயக்கிய அவள் கதா பாத்திரத்தின் உண்மை யான உருவம். அக்கதை யின் மூலம். அவள் போன பின்பு நண்பன் கூறினான், இவளைப் போல் பலர் இப்படியான வேதனை களை அனுபவித்துக் கொண்டிருக்கிறார்கள்.

இவளாவது "வயதின்" பின் கொடூரத்தை அனுப விக்கிறாள், பத்து வயது க்கு உட்பட்ட பல சிறுமி கள் இந்த பாலியல் வன் முறைக்குள் சிதைக்கப் பட்டுக் கொண்டிருக்கி றார்கள் தெரியுமா எனக் கேள்வியெழுப்பினான்?

இப்படியான மனிதத் தன் மையற்ற மிருகங்கள் எமது சமூகத்தில் இருக்கி ன்றனவா என்ற கேள்வி யோடு பல சமூக அமைப் புக்களோடு தொடர்பு கொண்டு விசாரித்த பொழுது எமக்குக் கிடை த்த......

கனடாவில் மூன்றில் ஒரு சிறுவனும், இரண்டில் ஒரு சிறுமியும் பாலியல் வன் முறைக்குள் தள்ளப்படுகி றார்கள். 18 வயதினை நெருங்கும் முன. இப் பாலியல் வன்முறை அவர் களின் விருப்பமின்றி திணி க்கப்படுகின்றது. அதில் ஈடுபடாமல் போகும் பட் சத்தில் வன்முறை அவர் கள் மேல் பிரயோகிக்கப் படுகின்றது. இதில் படு கேவலமான கொடுமை யான விடயம் என்ன வென்றால், மூன்றில் இரண்டு பங்கான பாலி யல் வன்முறை நெருங்கிய உறவினர்களாலேயே நட த்தப்படுகின்றது என்பதே.

அண்மையில் BBC Tamil பகுதியில் இடம்பெற்ற கட்டுரை ஒன்றில் இலங் கையில் பாலியல் வன் முறைக்குள் சிறுமிகள் என்ற பகுதியில் தன் அப்பாவே தன் பிள் ளைக்கும் அப்பாவாகும் நிலை என்கின்ற அதிர்ச்சி தரும் செய்தியை வெளி யிட்டு இருந்தது.




இப்படியான நிலை இங்கும் இடம் பெறுவதா கவே புள்ளிவிபரம் கூறி நிற்கின்றது. இதற்கும் தமிழ் சமூகத்திற்கும் என்ன சம்பந்தம் என நீங்கள் எண்ணலாம். மனதைத் தைரியப்படு த்திக் கொள்ளுங்கள். எமது சமூகத்தில் இப் பாலியல் வன்முறை மிகப் பெரிய அளவில் இடம் பெறுகிறது என்பதே.

எமது சமூகத்தில் இப் பாலியல் வன்முறைக்கு பல சிறுமிகள், இளம் பெண்கள் உள்ளக்கபட்டிருக்கிறாள். வெளியில் பெருமளவில் செய்திகள் வராத பொழுதும், அப் பிரச்சினை தீர்க்கப்படாத நோயாக எமது சமூக த்தில் தொடர்கின்றது. இப்பாலியல் வன்முறை க்கு காரணம் என்ன? இப்பிரச்சினை எவ்வடி வத்தினுள் அலைந்து கொண்டிருக்கிறது? இதில் அதிகளவு பாதிக்கப் படுபவர்கள் யார்? இதற் கான சூழல் என்ன? இப் பாலியல் வன்முறைக்கு உள்ளாகும் சிறுவர், சிறு மிகள் அதற்குப் பின் எப்படி செயற்படுவார் கள்? என்பதை எம்மால் முடிந்தளவில் வெளிக் கொண்டுவர முயல்கி றோம்.

### இப்பாலியல் வன்முறை க்கு காரணம் என்ன?

பச்சையாக சொல்ல வேண்டுமெனில் நாக்கைத் தொங்கப் போட்டுக் கொண்டு நாயாக அலை யும் காமக் கொடூரர்க ளின் காம இச்சையே காரணம்.

# கனடாவில் பாலியல் கொடுமைக்குள் தமிழ் சிறுமிகள்!

ஆனால் இந்த காம இச்சைகள் தங்கள் சிற்றின்ப ஆசைக்கு அழி க்க நினைப்பது சின்னஞ் சிறு பூக்களை, சரி இவர்களின் வெறிக்கு என்ன காரணம்? சொந்த தேசத்தில் மனைவி பிள் ளைகளோடு வாழ்ந்த இவர்கள் இப்புலம் பெயர் ந்த மண்ணில் தன்னந் தனியாக வாழவேண்டிய சூழ்நிலை சிலருக்கு. மனைவி இருந்தும் தன் ஆசையை சரிவர அடைய முடியாத நிலை சிலருக்கு. திருமணமாகாத வயது வந்த ஆனால் பெண் இல் லாமல், காம இச்சை யோடு அலையும் நிலை பல பிரம்மச்சாரிகளுக்கு. எதையும் திறந்து வைக் கும் இம்மண்ணில் காணா ததைக் கண்டதுபோல், பல படங்களை பல விதமான சமூக நிகழ் வுகளைக் காணும் இவர் கள் தங்கள் ஆசையை அடைய இளம் பிள்ளை களை தம் பசிக்கு இரையாக்க முயல்கிறார் கள். அதற்கான சந்தர்ப் பத்தை எதிர்பார்த்து காத்திருக்கும் இவர்கள் சரியான பொழுது வரும் வரை தங்கள் முகத்தி ரையை நல்லவர்கள் போல் காட்டி அலைகின் றார்கள்.

இப்பாலியல் வன்முறை எவ்வடிவத்தினுள் அலைந்து கொண்டிருக்கின்றது?

15 வயதிலிருந்து மிகவயதுபோன ஆண் வடிவங்களில் இவ் வன் முறையாளிகள் அலைந்து கொண்டிருக்கிறார்கள், நண்பர்கள், உறவினர் கள், வீட்டில் வாடகைக்கு இருப்பவர்கள் வீட்டு பெரி யவர்கள், வீட்டுக்கு வரும் மதிப்பு மிக்கவர்கள் என பல உருவங்களில் இப் பாலியல் வன்முறையாளிகள் அலைந்து கொண் டிருக்கிறார்கள். இரை தேடும் மிருகங்கள் போல்.

இதில் அதிகளவு பாதிக்கப்படுபவர்கள் யார்?

6 வயதிலிருந்து 16 வய திற்கு உட்பட்ட சிறுவர் சிறுமிகளே அதிகளவு பாதிப்பு அடைகின்றா ர்கள். 16 வயதிலிருந்து 19 வயதிற்கு உட்பட்ட teen agers குறிக்கப்பட்டளவு நண்பர்களாலும், மற்றும் பலராலும் பாதிக்கப்படு கிறார்கள். 6 வயதிலி ருந்து 16 வயதிற்கு உட் பட்ட சிறுவர் சிறுமிகள் தனிமையில் இருக்கும் பொழுது அல்லது தாய் தந்தையரால் இன்னொரு வரின் பாதுகாப்பில் விடப் படும் பொழுது இச்சம்ப வம் நிகழ்கின்றன.

இதற்கான காரணம், பின்னனி என்ன?

தனிமை, அளவுக்கு மிஞ்சிய கண்மூடித்தனமான நம்பிக்கை, மதி ப்பு! ஒருவர் மேல் வைக்க ப்படும் அளவுக்கதிகமான பாசம் என்பன,இவர்கள் சிறுவர் சிறுமிகளை பலவீனமா க்கி தங்கள் இச்சையை அடைகிறார்கள்

இப்பாலியல் வன்முறை க்குள் உள்ளாக்கப்படும் சிறுவர் சிறுமிகளின் (beha viors) செயற்பாடுகள் எப் படி மாற்றமடைகின்றது. ( சில விடயங்கள் பாலியல் வன்முறை தாண்டிய வேறு abuse இனால் இடம் பெறலாம்)

- Lack of interest, or drop in marks at school.
- Child may have become involved in prostitution
- Symptoms of withdrawal
- Change of eating and sleeping behavior
- Nightmares or bad dreams
- Child acts in a seductive manner
- Child may runaway
- Rebellious behavior
- Social difficulties
- Displays violent behavior to animals or dolls.
- Unwillingness to change for physical education classes.
- More accident prone
- Excessive crying
- Child displays acts depicting sexual situation
- Onset of lies
- Wetting their bed
- Edgy, nervous or hyperactive behavior
- Sexual knowledge inappriate for child's age.
- Problems sleeping
- Thumb sucking.

மேற்கூறிய பழக்கவழக் கங்கள். சில வேறுபட லாம். எமது சமூகத்தின் வாழ்க்கை முறைகளால் இப்பாலியல் வன்முறை எமது சமூகத்தினுள் பெரி தளவில் இடம்பெறுகின் றது என்று கூறியிருந் தோம். அதற்கு அமைய சில உதாரணங்கள்.

உதாரணம் 1
எமக்கு கிடைத்த தகவல் களை, கதைகளை, அவர் கள் எழுதியதிலிருந்து எமது வடிவத்தினுள் மாற்றி தருகின்றோம். காரணம், சிலரின் எழுத்து முறை வேறுபட லாம் என்பதால்)

எனது பெயர் அவசியம் இல்லை. நானும் எனது தங்கைகளும் கனடா வந்து நான்கு வருடங்கள் ஆகிவிட்டன. எனது அப்பாதான் எங்களை இங்கு அழைத்திருந்தார். எங்கள் வீட்டில் எனது சித்தப்பாவின் பிள்ளைகளும், (தங்கை முறை) இருக்கின்றார்கள். எல்லோரும் சேர்ந்து ஐந்து பேர், இருவர் பத்து வயதிற்கு உட்பட்டவர்கள். எங்கள் வீட்டிற்கு எனது அப்பாவின் நண்பர் ஒருவர் தினமும் வருவார். அவர் நிறைய படித்தவர். நன்றாக கதைப்பார். எங்களை வந்த புதிதில் அவர்தான் எல்லா இடமும் கூட்டிக்கொண்டு போவார். நாங்கள் மாமா என்று அன்பாக அவருடன் பழகினோம். காலப்போக்கில் அவர் வீட்டில் இருக்கும் பொழுது எங்களுடன் நல்லவர் போலவும் வெளியில் சென்றால் வேறு விதமாகவும் நடக்கத் தொடங்கினார். எனக்கும் எனது இரு தங்கைச்சிமாருக்கும் எப்பவும் காமக் கதைகளை கூறிக்கொண்டேயிருப்பார். ஆரம்பத்தில் இதை விளையாட்டாகத் தான் நாங்கள் விட்டுவிட்டோம். ஆனால், அதற்குமேல் அவர் எங்களிடம் அசிங்கமாக நடக்க முற்படுகின்றார். இதை வீட்டில் எப்படி சொல்வது என்று தெரியவில்லை. வெட்கமாகவும், அவமானமாகவும் இருக்கின்றது. நாங்கள் யாரிடம் சொல்வது என்று தெரியாமல் தவிக்கின்றோம், அவர்தான் எங்களது இரு தங்கைகளையும் பள்ளிக்கூடம் கூட்டி செல்பவர். அவர்களுக்கும் இவரினால் பிரச்சினைகள் வந்திருக்கலாம். தயவு செய்து உதவுங்கள்...

# கனடாவில் பாலியல் கொடுமைக்குள் தமிழ் சிறுமிகள் !

( இவர்கள் பிரச்சினை தீர்க்கப்பட்டிருக்கும் என்றே நம்புகின்றோம்)

உதாரணம் 2
எனது மாமா இலங்கைக்கு போக இருந்தார். அவரிடம் ஊரில் இருக்கும் எனது ஒன்றுவிட்ட சகோதரர்களுக்கு உடுப்புகள் கொடுத்துவிட சென்றிருந்தேன். மாமாவின் மனைவி அவரை விட்டு ஓடிவிட்டார். மாமா, இலங்கை போவதே இன்னொரு கலியாணம் செய்யத்தான். மாமா வீட்டை போன என்னை மாமா பாலியல் விடயத்தில் ஈடுபடுமாறு வற்புறுத்தினார். நான் ஒருவாறு தப்பி வீடுவந்து விட்டேன். இதை அம்மாவிடம் சொன்ன பொழுது யாரிடமும் சொல்ல வேண்டாம் என்று தடுத்து விட்டார். (இவருக்கு வயது 17) எனது நண்பி ஒருவரின் மூலம் அப்பெண்ணின் கதை எனக்கு தெரியவந்தது. அப்பெண் சிறு வயதாக இருக்கும் பொழுது "வயதிற்கு வரும் முன்பே" இதே மாமனால் பாலியல் வன்முறைக்குள் உள்ளாக்கப்பட்டிருக்கிறாள்)

உதாரணம் 3
பிரபலமான கல்லூரி. அதில் தமிழ் சமூக அமைப்பில் இயங்கும் ஒருவர் ஆசிரியராக இருக்கின்றார். அவர் தனது வகுப்பில் படிக்கும் தமிழ் மாணவிகளை தனது சோக கதைகளை கூறி தனக்கு சந்தோசத்தைத் தருமாறு கெஞ்சுவதாக அக்கல்லூரியை சேர்ந்த மாணவிகள் சிலரிடம் இருந்து இச்செய்தி தெரியவந்தது. தனது மனைவி நோய்க்காறி என்றும், இவர் தனிமையில் வாடுவதாகவும் தெரிவித்து பல மாணவிகளின் வாழ்க்கையில் பிரச்சினையை உருவாக்குகின்றார்? (இதில் எவ்வளவுக்கு உண்மை என்பது தெரியாது ஆயினும், நெருப்பின்றி புகை வராது என்பதற்கு இணங்க.....)

மேற்கூறிய கதைகளை தாண்டி வெளியில் சொல்ல முடியாத அசிங்கங்கள் எமது சமூகத்தில் அரங்கேறுகின்றன. இங்கு நாம் கவனிக்கவேண்டிய விடயம் என்னவென்றால், வெளியில் சொல்லமுடியாமல் அப்பிரச்சினையின் பாதிப்பை பெரிதளவில் அறிய முடியாத அப்பாவி சிறுமிகள் பற்றியதே. வயது வந்த பெண்களே பயப்படும் பொழுது, தாம் என்ன சூழ்நிலைக்குள் தள்ளப்படுகின்றோம் என்று அறியாமலேயே, அழிந்துபோகும் அவர்கள் மென்மைக்கு யார் பதில் சொல்வார்கள் என்பதே.

இப்பிரச்சினைக்கு முக்கிய காரணம் என்ன? மூடிமறைக்கும் எமது மனோபாவமே காரணம். முரண்பட்ட கலாச்சார அமைப்பு எமக்குள் இருப்பதே காரணம்.
மோட்டுத்தனமான நம்பிக்கைகளே காரணம். அளவுக்கதிகமான முறையில் ஆசைப்படுவதே காரணம். எமது சமூகத்தின் அமைப்பில் முரண்பட்டு நிற்கும் பிற்போக்கு வாதம் களையப்பட வேண்டும். குடும்ப அமைப்பு சிதைந்து போகக் கூடாது என்கின்ற போர்வையில் மனித மனங்களை சாகடிக்கும் வறட்டு கௌரவம் களையப்பட வேண்டும். சின்னப் பிள்ளை தானே, இனிமேல் பார்க்கலாம். எனத்தட்டிக் கழிக்கும் எண்ணங்கள் மாற்றப்பட வேண்டும்.

சரியான முறையில் பிரச்சினைகளுக்கான தீர்வு எட்டப்படாதவரையில் பாலியல் வன்முறை தொடரும். இது இப்பொழுது ஒன்றும் தோன்றவில்லை, எப்பொழுதும் எங்கும் இருக்கின்றது. இதற்கு நாம் என்னதான் செய்ய முடியும் என்று நீங்கள் தட்டிக்கழிப்பீர்களானால் நாளை இன்றை இளம் சமூகம் வழிதவறிய சமூகமாக மாற்றப்பட வாய்ப்புகளை நீங்களே உருவாக்கியவர்களாவீர்கள். எது காயப்பட்டாலும் மனம் காயப்படும் பொழுது விரக்தியின் எல்லைக்கு இன்று இல்லாவிட்டாலும் காலப்போக்கில் அவர்களை மாற்றிவிடும். உங்கள் பிள்ளைகளின் நிலைக்கு பெற்றோர்கள் நீங்கள்தான் முழுக் காரணம். Abuse என்பது Sexual மட்டும் சம்மந்தப்படவில்லை என்பதை நீங்கள் உணர வேண்டும். எங்கள் நாட்டில் எப்படி பிள்ளை வளர்ப்பு முறை இருந்ததோ அதை இங்கு பின்பற்ற முயல்வது மிகப்பெரிய தவறாகும். அளவுக்கு அதிகமாக மற்றவர்களை நம்பி உங்கள் பிள்ளைகளை அவர்கள் பாதுகாப்பில் விடுவதும் தவறாகும். யார் பொறுப்பில் இருந்தாலும் கண்காணிப்பு அவசியம். பிள்ளைகளின் நாளாந்த நடைமுறைகளை கவனிக்க வேண்டும். அவர்கள் பாடசாலைக்கு சென்று அவர்கள் கல்வி சம்மந்தப்பட்ட விடயங்களை ஆராய வேண்டும். அவர்களோடு நண்பர்களாக பழக வேண்டும். இவைகளை விட்டு பணம் சேர்ப்பதும், ஆடம்பர வாழ்க்கை வாழ்வதும்தான் உங்கள் குறிக்கோள் என்றால், எதற்கு பிள்ளைகள்? தனியாக வாழ்ந்துவிட்டுப் போங்கள்.

பாலியல் வன்முறை எமது சமூகத்தில் பெரியளவில் இடம் பெறுகின்றது என்பது எவ்வளவுக்கு உண்மையோ, அவ்வளவுக்கு இது தொடரும் என்பதும் உண்மையே. அநியாயமாக இளம் காலத்திலேயே பிஞ்சுகளை சிதைக்கும் அரக்கர்கள் அதிக அளவில் இருக்கின்றார்கள் என்பதும் உண்மையே. இளமையில் சிதைந்துபோன பெண்/ ஆண் பருவத்தில் பாதை மாறிப் போவதற்கு இவையே ஒரு விதத்தில் காரணமாக இருக்கின்றது என்பதும் உண்மை.

பாலியல் வன்முறையாளிகளே பிள்ளையின் வயதில் உடன் பிறந்த உறவுகளின் வயதில் நண்பர்களின் வயதில் இருக்கும் இளம் சந்ததியை சிதைக்கும் உங்கள் கொடூரக் குணம், வெட்டி எறியப்பட வேண்டும். நாளை நீங்கள் விதைத்ததை அறுவடை செய்ய வேண்டும் என்பதையும் மறவாதீர்கள்.

ஒரு இனம் விழிப்பாக இருக்க வேண்டும் எனில் அது சார்ந்த சமூகம் விழிப்பாக இருக்க வேண்டும். ஒரு சமூகம் விழிப்பாக இருக்க வேண்டுமெனில் அது சார்ந்த குடும்பம் விழிப்பாக இருக்க வேண்டும். அதில் குடும்பத் தலைவர்கள் விழிப்பாக இருக்க வேண்டும்.

வேலியே தன் பயிரை தானே மேயும் சமூக போக்கு உள்ளவரை வன்முறை, பாலியல், என தொடரும் சமூக குற்றங்கள் குறைவதற்கு வாய்ப்பு அரிதாகிவிடும். இது மாற வேண்டும். மாற்றம் என்பது தனிமனித தொடக்கம்................



-யாசகன்




# YUTSA யோர்க் பல்கலைக்கழக தமிழ் மாணவர் அமைப்பு

## York University Tamil Students Association

On Tuesday October 11, 2005 YUTSA (Tamil Students Association @ York) celebrated their annual Saraswathy Pooja. This event started off with opening mantras sung by our own cultural coordinator Raman and his brother Rajan, followed by a karnatic dance, and live songs and music by our own York students. After the pooja, students were treated to great home cooked foods, from aval, pongal, vadai, and much more.

Our executives decided to organize something new and different…. and we did. The highlights of this event, undoubtedly was the dance, and music. For many of our old students this was by far "the best Saraswathy pooja" they've participated in. York's TSA executives will be planning more upcoming events. Although we do have cultural and social activities, we try to focus more on our culture and bring awareness and unity among our Tamil students as well as education people of other ethnic backgrounds of our true selfs.

We hope and look forward to working with other university TSAs as well as high school students in our Toronto community in implementing peace and unity. Please visit our web site at www.yutsa.com and check often.

On behalf of the TSA execs I would like to give special thanks to our performers Sharla, Durga, Petunia, Ramanan, Ranjan, Vakeesan, and special thanks to Sathya (unfortunately we don't have his picture) for his singing which truly filled that day with essence. Thank you guys all once again, and special thank you for everyone who came that day. We hope to see you all in the future!!


Durga with the veenai, and Petunia singing


Ramanan with tablas, and his brother Ranjan


york stdudents


Ramanan's brother Vakeesan on keyboard


Sharla

# Saraswathy Pooja

From Left to Right
Standing: Mathu Balachandran (**president**), Puvi (Aaron) Srisanthrarajah (**treasurer**)
Sanjay Chreekantha (**1st year rep**), Ajith Sivasubramaniam (**secretary**), Ramanan Muthulingam (**cultural coordinator**), Aravinth Kanagaratnam (**web master**).

Sitting: Sherin Rasian (**social coordinator**), Karthiga Thayananthan (**cultural coordinator**), Sarva Jeyapalan (**Social coordinator**), Manojah Ganeshalingam (**Vice president**), Haran Karunakaran (**sports coordinator**)

Aaron Srisathrarajah
(TSA treasurer)

# Child Sexual Abuse

## Where to Get Help

### Child Welfare

There is a legal obligation to report all suspected child abuse to Child Welfare. However, beyond this obligation Child Welfare can be very helpful to you if you suspect (or know) that your child has been sexually abused. As an agency, Child welfare is very experienced at investigating suspected child abuse. As well, they work closely with the police in this area and this only enhances their services. A call to Child Welfare does not mean that your children will automatically apprehended, unless they are still in danger of being abused. As long as you are ensuring your child's safety from the offender Child Welfare is a resource that is there to help you. Not only will they be involved in the investigation, but also possibly the apprehension and prosecution of the offender, but they will also help you to locate counseling resources for yourself and your child.

It is important to get the help for your child that you feel they need after the sexual abuse. There are three areas where you may feel assistance would be warranted - medical, legal and emotional.

### Medical

It is extremely important that your child receives medical attention as soon as you know of the abuse (or suspected abuse). Your pediatrician may be of help to you in determining if anything has happened to your child. Even if there are no visible signs or injury, there may be internal injuries, infection, sexually transmitted diseases, or pregnancy (depending on the age of your child).

### Counseling

Counseling can help with the emotional aftermath of sexual abuse for both you and your child. There are many individuals and agencies that offer counseling in Edmonton and the surrounding area. Most will require you to have reported that abuse to Child Welfare before they will begin counseling. In some instances they will see both the child and the non-offending parent, and in other instances you will get completely separate counseling. The cost ranges from free, to what you can afford, to private counselor rates. To find out what option will work best for you - you can call our crisis line (423-4121) and ask for referrals.

### Legal

You can get legal assistance from the police and, later, the courts. If you require more information on these, please refer to Legal Information.

children should be seen, heard and believed

Important messages to convey to the child are:

- It's not your fault
- I believe you
- I'm glad you told me
- I'm sorry this happened to you, and
- Together, we will try to get you the help you need

TO kids….Turn to page 16 to see if you're a WINNER of a special Halloween prize.

**Dear Cid**

**I have a 13 year old daughter. I am worry about her a lot when I hear more and more high school kids are having sex and becoming pregnant. Isn't it against the law. Why would a 14 year old want to be sexually active?**

**Mrs. Kuna**

Dear Mrs. Kuna
As new immigrants to this country all of us feel out of place. We do things to fit in and have a sense of belonging even if it means going against what was morally instilled in us all our lives.

When a question emerges why a 14-year old would be sexually active? We are perplexed. Why???? Are the parents not strict? Or have very thin moral fiber? The child was not taught good mannerism? Is the child eager to go up? Too much media influence? Even though all these statements could be true one important reason stands out that is, they didn't spend enough time with the child. They were not there for the child when he/she needed them. Most of the sexual offenders are people the children know. Consensual sex with 16 years old or under would still be a criminal offence. As Young adults are very impressionable they learn fast and follow the trends to fit in. Parents work around the clock to make ends meat while children are left alone for long hours without any supervision.

Children need lots of love and affection to grow. As dependents they trust who ever can take care for them. It is very imperative that the adults do not misbehave, confuse or abuse the children. It is important to teach the children through positive reinforcement to guide their behavior rather than punish them to behave the way an adult would want them to behave. Understanding what is causing the problem, when and how often it seems to happen will help you to decide what to do.

Children who witness violence in their home may suffer emotional damage watching a loved one being physically or verbally attacked. Developing a positive relationship between children and caregivers making them feel good about them selves is very essential in developing self-control. Parents should interact with their children in a positive way so they realize that it is only their behavior that the parents don't approve of and not them.

Cid

Dear Cid...

Do have a burning Question you want answered? Ask Cid

Valued readers plese send in your question, query, issues and matters to cid@totamil.com
Responese will be posted at the next issue by cid

## Child Sexual Abuse

(Behavioural & Physical indicators)

**Please note that some of these behaviours may have other explanations, this is merely a guideline for identifying possible sexual abuse.**

- Lack of interest, or drop in marks at school
- Child may have become involved in prostitution
- Symptoms of withdrawal
- Change of eating and sleeping behaviour
- Nightmares or bad dreams
- Child acts in a seductive manner
- Child may runaway
- Rebellious behavior
- Social difficulties
- Displays violent behaviour to animals or dolls
- Unwillingness to change for physical education classes
- More accident prone
- Excessive crying
- Child displays acts depicting sexual situation
- Onset of lies
- Wetting their bed
- Edgy, nervous or hyperactive behavior
- Sexual knowledge inappropriate of child's age
- Problems sleeping
- Thumb sucking
-

**Physical indicators that your child may be a victim of unwanted sexual abuse:**

- Strange bruises in the shape of blunt objects
- Venereal Diseases
- Traces of blood on underwear
- Strange unexplainable injuries
- Cuts, bruises, or rashes around the genital area
- Pain or bleeding around genital area
- Swelling around the anal region
- pregnancy

# அக்கரையும் பச்சையாகுமா?

மெல்லத் தமிழ் இனிச் சாகுமா என்று ஒரு கவிஞன் அன்று கேட்டான். அது இன்று நடந்தேறுகிறது போலும். பாரம்பரியம் மிக்க எமது கலாச்சாரமும் பண் பாடும் வெறும் பகட்டுக் கௌரவத்திற்கு இரையாக்க ப்படுகின்றது. இவையெல் லாம் நடப்பது வெளிநாடு களில் மட்டும்தான் இவற்றிற் கான காரணம்? எம் தாய்மண்ணையும், மக்களை யும், அவர்கள் தம் ஒழுக்கங் களையும் எண்ணும் போது நாமும் ஏன் அவ்வாறான ஒரு வாழ்வை இங்கு வாழ்ந்து காட்டக் கூடாது? நான் ஓடி விளையாடித் திரிந்த என் அன்னை மண் ணின் பசுமையான நினை வுகள் என் கண்முன்னே நிழலாடுகின்றன. வெளிநாடு வந்தேன்(வெளுத்ததெல்லாம் பால் என்று நம்பி) நிறைய எதிர்பார்ப்புகளும் எண்ண ங்களும் நிறைந்திருந்தன. ஆனால் அனைத்தும்? இங்கு நாம் கேட்க வேண்டிய வினா மகிழ்ச்சிக்கு என்ன விலை? ஏனெனில் அது எம்மிடம் காணப்படுவதில்லை. அருகி க்கொண்டே செல்கிறது. ஒரு நிமிடம் கூட ஓய்வின்றி திரியும் மனிதர்களையே பார்க்கின்றேன். அதைவிட மேலாக மனிதாபிமானமே.

ஒரு தேவை கருதி எனது கனடிய நண்பனிடம் பணம் பெற்றேன். திரும்ப கொடுக் கையில் வட்டிப்பணமும் கேட்கிறான். இதை நாம் ஊரில் நோக்கினோமானால் என் அனுபவம் : என் நண்பனிடம் பணம் கேட் டேன் ஒரு தேவை கருதி, அவன் அதை தரும் போது கூறியது மச்சான் இதென் னடா போகும் போது எம் மோடா வரப்போகுது, எல் லாம் இருக்கும் வரைக்கும் சந்தோசமாக இருக்கத்தான் என்று. அவ் இளம் வயதில் அவனிடம் இருந்த அப்பரந்த சிந்தனை? எம் கனடா நண்பர்களிடம் காணலாமா? நான் நேசிக்கும் நெஞ்சங் களில் அவனும் ஒருவன். காலத்துக்கு காலம் எம் குணம் பண்பாடு, மாறுப டுமா? இதேவேளை நாம் வளரும் சூழல், வளருகின்ற விதம் எம்மை ஏதோ ஒரு திசையில் இட்டுச் செல்லும். நம் தாய் நாட்டில் காதலை போற்றி வாழும் எம் காத லர்களும், காதலுக்காக எதையும் செய்யும் உறவு களும் இருக்கின்ற வேளை யில் இங்கு காலையில் ஒருவனுடன் திரிந்த காதலி, மறுநாள் இன்னொருவனு டன் கா(த)லியாக திரிகி றாள். காதலனும் விதிவிலக் கல்ல. இவ்விடத்தில் நாம் யாரை நோவது? தமிழை பேச வெட்கப்படுபவனை நாம் தமிழன் என்று சொல் லலாமா? தமிழை கற்க துடிக்கும் பலர் மத்தியில்



நாம் இங்கு பேச மறுக் கிறோம். இதையா பழையன கழிதலும் புதியன புகுதலும் என்பது?

இதுதான் வெளிநாட்டு வாழ் க்கை என்று கூறி மூடி மறைப்பதா? அல்லது பெற் றோரின் வளர்ப்பு என்பதா? இங்கு நாம் எதை எதிர் பார்ப்பது? என் உணர்வு களை எம் தமிழினமே புரிந்து கொள்வீர்களா? எம் வாழ்க்கைக்கு ஒரு அர்த்தம்





வேண்டும். பகட்டு வாழ்க்கை வாழப் பிறந்த இனமல்ல எம் தமிழினம். சொல், செயல், உணர்வுகளில் உரமேறிய இனம் எம் தமிழினம். எந் நிலையிலும் நாம் எம் பண் பாட்டை மறக்காது, எம் ஊர் வாழ்க்கை முறையை உணர்ந்து இங்கும் அதைப் போன்று வாழமுயல வேண் டும்? நாம் நினைத்து முடிக் காத காரியம் என்று எதுவும் உள்ளதா? ஒவ்வொரு மனதி லும், (குழிதோண்டிப் புதைக் கப்பட்டிருக்கும் அல்லது புதையுண்டிருக்கும்) எம் பண்பாட்டை மீள வெளிக் கொணர்ந்து எம் தமிழின த்தின் தன்மானத்தை காக்க வேண்டும். முடியுமா? இந்தக் கேள்விக்கே இடமில்லை. முடியுமா என்ற நினைப் பிற்கே இடமில்லை. மாறாக எப்படி இதை நிறைவேற்று வது என்று சிந்தியுங்கள்? இறுதியாக மிகுந்த எதிர் பார்ப்புடனும், எம் தமிழி னம், எம் பண்பாட்டை எப்பொழுதும் கட்டிக்காப் போம் என்ற நம்பிக்கை யுடனும் .....



அஜித்

# Healing from Child Abuse: A Personal Account



Everyone called the old man "Uncle" Ray. He had a huge, hawk nose and lied to folks about being an Indian. Ray Pierce taught me how to read deer tracks and make bird calls. When I was ten, he taught me how to shoot a .22 bolt action rifle: site in; focus; take a breath; let half out and hold it; squeeze the trigger; right palm up; hand around the ball; up; back; forward; down; repeat.

I had the perfect chance to put a bullet thru the back of his head. I regret that I did not do so.

He's long since dead, but he caused damage for many women who are now wives, mothers, grandmothers, friends.

In the 1950s he ran a small vacation site in Montmorency Co., MI. In the fall and winter, hunters filled the cabins. In the summer, families rented the cabins and let their kids walk around the fish pond, sit under the pine trees, and swim in the bend of Gilchrist Creek. Ray Pierce molested every little girl he could get his calloused hands on. I was one of them.

It began the summer I was four. By the time I was eight, I had figured out how to avoid him during my family's summer stays. Even as I approach 50, there are times that the past given to me by Pierce comes over me in a cold wash and freezes me where I am.

Before my children could even talk, I told them often and in the presence of other adults, "No one should touch between your legs or inside your pants. No one should ask you to touch his body. No one should give you weird kisses with the tongue. Tell Mommy if anybody ever does this. Even if the person says it's a secret."

Children need information to protect themselves. Usually, the abuser knows everything, and the child knows nothing. The abuser knows the object of the game; the child does not.

At four, and five, and six, I was completely confused. "Why is this old man touching me like this? Why do my parents act as if he's their friend? Why does he act as if he's my friend?"

Like many children whom pedophiles select as victims, I did not have a close relationship with my parents. So when the old man said, "You like this, don't you? This is our secret. Don't tell anyone," I was sure it was something that would make my parents angry to hear about, and I felt their anger would be directed at me. Besides, why would they believe me? I figured that if I told, I'd either get hit because I had let it happen, or they'd say I

The first summer was the summer before I started kindergarten. Since I had told no one after the first summer it happened, I knew I couldn't tell anyone the second summer it happened. I feared if I told them, their response would be, "What?! You mean this happened last year, and you didn't tell? Why not? Why did you let it happen?" SMACK!

I was five the second summer it happened. I was getting ready for first grade. I could not read, but I could write my name with effort and do simple addition.

I had some warning before the first summer that it happened. I had an older half-sister with whom I shared a bedroom. As we lay in our bunk beds one night, lights out, going to sleep, she told the story of what this man had done to "another girl, one that we met last summer." It sounded made up. After it happened to me, she said she was that "other girl."We made a pact, my half-sister and I: I would never leave her alone with Pierce; she would never leave me alone. Still, he was smarter than two little girls, and he didn't seem to mind sticking his hands inside my pants even when there were other children present.

I learned to dress differently. Before, I had loved dresses, but when my mother was packing clothes for our stay the second summer, I insisted, "no dresses, only pants." Dresses make little girls so frighteningly accessible. Summer by summer, I got better with the dressing. Jeans with a zipper and a belt were best, matched up with a pull-over, no-button shirt with short, fitted sleeves. I'd tuck the shirt in, cinch the belt tight and put the buckle on the side so that I could make the buckle hard to get at if I could keep my arms down. Before I was eight, I knew how to make myself inaccessible.

Understandably, my parents must have welcomed the respite from child care when Pierce would offer to sit by the creek with children and tell stories in the evening. "Go with 'Uncle' Ray, and do as he tells you." A standard command parents give children when they want their kids to behave for someone else. One more confusion for a child.

As for the false use of the title "uncle," it added confusion for a young child. To me "uncle" meant somebody in the "grandma and grandpa family," someone who would treat me kindly and allow me to eat his food and run loose in his house. "Uncle" meant, "Everything's safe, and he won't even yell."

Nothing was safe with "Uncle" Ray. He would send my parents Christmas cards with a picture of the cabins at Gilchrist Creek. My parents saw them as a business promotion; I saw them as mid-year threats-across-the-miles.

As a third grader I finally told someone a little of what had happened. Another little girl and I walked side-by-side on the cinder path on our way to school. I told her about Pierce. A child herself, she told other children. I spent the rest of that school year being taunted by the words and hand gestures of a small group of snotty-nosed third-grade boys. As I would walk the half-mile to school, they would walk ahead of me, walking backwards so I could see them make gestures with their hands on their crotches.

page 14

## அவசர சிகிச்சை தேவை

சீர் கெடுக்கிறது
சின்னச் சமுதாயம்
மூச்சுக்கு முன்னூறு தடவை
மூத்தகுடி என்று மூதறிஞர்கள்
மூலையிலிருந்தும் மேடையிலும்
சொல்லும் தமிழ் குடி
சீர்கெடுக்கிறது
(சில) சிறார்களால்
ஈழத்தில் தமிழனென சொல்லி
தலை நிமிர வைக்கிறது
தன்மான தமிழ்ப்படை
இடம்பெயர்ந்த நாட்டிலோ
தமிழனென்று சொன்னால்
தலைகுனிய வைக்கிறது தமிழ்க்
காங் (Gang)
தமிழ் மொழி மெல்ல சாகும் முன்
தமிழனின் மானமும் மரியாதையும்
வேகமாக மரணிக்கும் நிலை
மொழியும் மானமும் தான் மனித
மூச்சு
இரண்டும் இல்லையேல் அது
மாண்ட மனிதன்
இன்னிலை தொடர்ந்தால்
தரணியெங்கும் தமிழனுக்கு தடை
நிற்பதற்கும் இருப்பதற்கும்
விழா எடுப்பதற்கும்
விற்பன்னர்களே
இதை நிறுத்துவதற்கு
நினைத்தீரோ செய்தீரோ
ஆய்வாளர்களே ஆரம்பியுங்கள்
இதை தடுக்க
அடுத்தகட்ட ஆய்வை
வைத்தியர்களே இளம் சமுதாயம்
எனும் உடலுக்கு
அவசரசிகிச்சை தேவை
மருந்துண்டோ?
மனோவியலாளர்களே
படம் பிடியுங்கள் இவர்கள்
மனதை
மாற்றத்திற்கு இடமுண்டோ என
நம் உருமைப் போராட்டத்துடன்
உட்சேர்ப்போம்
இவ்வுறவுகளுக்கான
நல்வழிப் போராட்டத்தையும்
நான் நீ என்று நமக்குள்
நாறாமல்
நாமென நினைத்து நடைமுறைப்
படுத்துவோம்
நாமும் தமிழனென சொல்லி
தலை குனியாமல்
தன்மானத்துடன் வாழ்வோம்.

ஈழவன் சுந்து

## இழப்பு

சிந்துஜா

இழந்ததை சொல்லவா?
இல்லை இழப்பதை சொல்லவா?
இழப்பின் மறுசொல்லே பிரிவுதானே.

உன்னை இழந்த போது உன்னை மட்டும்
இழக்கவில்லை.
என் உயிரையும் தான்.
என் கனவுகளை இழந்தேன்
என் இன்பத்தை இழந்தேன்.

பூ பூக்கும் மாதத்தில் தான்,
உன்மீது கொண்ட காதலும்
மலர்ந்தது. காலம் சென்று சொல்ல
பூ உதிரும் மாதத்தில் தான்
நீயும் என்னை விட்டு
உதிர்ந்தாய்!

உன்னை இழந்த பின் உயிர்
வாழ கூட பிடிக்கவில்லை.
இறைவனிடம் மனு அனுப்பினேன்
நான். இழந்தவற்றை மீண்டும்
தா என்று இறைவனே என்
மனுவுக்கு பதில் அழிக்கவில்லை
இறைவன் மீது கொண்ட
நம்பிக்கையை இழந்தேன்
கண்ணீர் உடன் கலந்து
கொண்டது உன் நினைவுகள்
நீளமான இரவுகளில்
அகலமான கனவுகளோடு
காலம், செல்ல மீண்டும் அதே
வலியோடு என் இதயம் ஏங்கியதுண்டு.
நீ மீண்டும் என்திசை
பாராயா என்று?

என் மனத்திரையில் நீ காட்டி
சென்ற பார்வையும் உன்
அன்பு மொழியும் தான் மரமாய்
வளர்ந்து நிற்கின்றது
இன்று வருவாயா?
நாளை வருவாயா?
என்று என் மனம் ஏங்கியதுண்டு
நிமிஷங்களாய், மணித்தியாலங்களாய்,
நாட்களாய், மாதங்களாய் உன்னை
நம்பி காத்திருந்தது உண்டு!

என் விழி பார்க்கும் திசை
எல்லாம் நீ தெரிவாய்
என்று ஏமாந்ததும் உண்டு
உன் மீது கொண்ட அன்பான
காதலையும், நம்பிக்கையும் என்
இதயம் இன்றும் இழக்கவில்லை
இழந்து கொண்டு இருக்கிறேன்

என் உயிர் ஓசையை, என்
நிழலை என் உலகை
என் ஆசைகளை
இவற்றையெல்லாம்
இழந்து கொண்டு
மரண படுக்கையில்
சில நிமிடம்
நிஜத்தில் சில நிமிடம்
உனக்காக வாழ்கின்றேன்
உறவின் அருமை
அழுப்பில்
கண்டு உன்னையே நான்
நேசிக்கின்றேன்!



## *The Pain Will Never Go Away*

*The pain will never go away;*
*The wound will never heal.*
*The evil that was done to you*
*Is now your eyes, your heart.*

*The black will never turn to gray;*
*The blood will not congeal.*
*The violence is never through;*
*The past does not depart.*

*Time will merely make you whole,*
*Consuming what you are:*
*Part sufferer, part comforter,*
*Part victim, part new song;*

*Part mother of an angry soul,*
*Part child of despair,*
*Part witness and part conqueror*
*Of all that did you wrong.*

